# 67. கபாலி

இரவு தூக்கமில்லை. புழுக்கம் என்பது மட்டுமல்ல; உடம்பில் ஏனோ ஒரு சில்லிப்பும் இருந்தது. இது ஜலதோஷம் காரணமாக ஏற்பட்ட லேசான ஜுரத்தினால் ஏற்பட்டதாகவும் இருக்கலாம். மொத்தத்தில் கனமில்லாத, தூக்கமும் இல்லாத, விழிப்பும் இல்லாத ஒரு நிலையில் இரவு ஒருவழியாகக் கழிந்து விட்டது.

ஒரு காலத்தில் நமது நகர்கள் எல்லாம் வாக் போவதற்குச் சௌகரியமாக, வண்டி மனிதர்கள் இல்லாமல் சௌகரியமாக இருந்தன. இப்போது நகர்ப்புறங்களில் ஜனக்கூட்டம் மட்டும் அல்ல; மாடுகள், மனிதர்கள், சைக்கிள் ரிக்ஷாக்கள், உயிர்இல்லாத சேதனப் பொருள்கள் என்று பலவும் ரோடில் நம்மோடு நடையிடப் போட்டி போடுகின்றன. நடப்பதே சிரமமாக இருக்கிறது. பூமிக்கு மேல் ஓடும் ரயில் இருந்தால் தேவலைபோல் இருக்கிறது. அதுவும் வரக்கூடும்தானே!

காலையில் எழுந்ததும், மனத்தில் ஏதாவது முண்டிக் கொண்டு வந்தால் எழுத உட்கார்ந்து விடுவேன். எழுத உட்கார்ந்து விட்டால் எழுத்து வேகத்திலிருந்து விடுபட ஒரு மணிநேரம், இரண்டு மணி நேரம் பிடிக்கும். வெய்யில் வந்துவிடும். காபி, இட்லிக்கு வெளியே போகலாமே தவிர வாக் போகக் கிளம்பத் தோன்றாது.

எழுதாத நாட்களில் அதிகாலையில் தூக்கமும், விழிப்புமான ஒரு நிலையில் கபாலி கோயிலைச் சில சமயம் குளம் உள்பட வலம் வருவது ஒரு சுவாரசியமான அனுபவம். ஐம்பது ஆண்டு களுக்கு முன் முல்லை முத்தையா இங்கே எங்கேயோ ரூம் வைத்துக் கொண்டிருக்கப் புதுமைப்பித்தனும், நானும் அவரைச் சந்தித்து குளத்தின் படிக்கட்டில் உட்கார்ந்து ஒரு மாலைப் பொழுது பூராவும் கழித்த நினைவிருக்கிறது. இலக்கியம் பற்றியும் வேறு பல விஷயங்கள் பற்றியும் பேசினோம். பு.பி., ஸ்வைக் என்பவரின்

ஒரு கதை பற்றிச் சொன்னார். நான் டி.எஃப். போவிஸ் என்பவரின் மிஸ்டர் வெஸ்டன்ஸ் குட்வைன் பற்றிப் பேசினேன் என்று எண்ணுகிறேன். பேச்சு அவ்வளவு முக்கியமில்லை. ஒருவருடன் ஒருவர் இருந்தது முக்கியமாக ஒரு உஷ்ணத்தை உண்டாக்குவதாக இருந்தது. இதை வேறு எப்படிச் சொல்வது என்று தெரியவில்லை.

அப்போது குளத்தைச் சுற்றி வேலியில்லை, நினைத்தவர்கள் குளத்துப் படிக்கட்டுகளில் இறங்கிப் படிக்கட்டில் உட்காரலாம். யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள். குளத்தில் கொஞ்சம் நீரும் இருந்ததால் பீச்போல இல்லாவிட்டாலும் காற்று குளுகுளுவென் றிருக்கும். இப்போது புதுமைப்பித்தனும் இல்லை. இருந்தாலும், என்னோடு நட்புப் பூண்டவராக இருப்பாரா என்பதும் தெரியாது. ஒரு சமயத்து நட்பு பலகாலத்து விரோதமாக மாறுவதைப் பார்ப்பது இப்போதெல்லாம் மிகமிகச் சகஜமாக இருக்கிறதே! முல்லை முத்தையா எங்கோ பிராட்வே பக்கத்தில் இருக்கிறார் இப்போது. நான் மட்டும் கபாலி குளத்தையும் சேர்த்து இன்று அதிகாலையில் சுற்றிவந்து கொண்டிருக்கிறேன். ஐம்பது வருஷத்தில் தொடர்பற்ற சிந்தனைகள் அறுந்த சங்கிலியாக என் மனத்தைப் பிணைக்கின்றன. வேறு வருவித்துக் கொள்ளவேண்டும் என்று தோன்றவில்லை.

கோயிலுக்குள் இருக்கிற கபாலியைப் போய்ப் பார்த்து எத்தனையோ ஆண்டுகள் ஆகிவிட்டன. பார்த்தபோதும் ஜன நெரிசலில் ஒரு விநாடிப் பார்வையில் உருவம் முழுவதும்கூடக் கண்ணில் பட்டதில்லை. "தெருவில் கேட்கிறதே-அந்தக் கூச்சல் தான் தெய்வம்" என் மனத்தை அறுந்த சங்கிலிக் கரணைகளாகப் பிணைக்கிறதே அதுதான் கபாலி என்று சொல்ல எனக்குத் தோன்றுகிறது. இதுதான் உண்மையா? என்னால் என்னைப் பற்றியவரையில் ஆமாம் என்றுதான் சொல்லவேண்டும்.

திரும்பி வடக்குமாட வீதியில் பாதி வழி வந்த பிறகுதான் ஒரு கேள்வி என்னுள் எழுந்தது. எதற்காக இப்படி எல்லோரும் போகிற மாதிரி வலமாக வரவேண்டும்? பிரதட்சிணமாகச் சுற்றினால்தான் புண்ணியம் என்கிறார்கள். ஆனால் எனக்குப் புண்ணியம் சேர்ப்பதில் அவ்வளவாக அக்கறை இருக்கிற மாதிரி தெரியவில்லை.

நின்று இரண்டு நிமிஷம் யோசித்துப் பராக்குப் பார்த்துவிட்டு அப்பிரதட்சிணமாகத் திரும்பி நடந்துவிடுவது என்று தீர்மானித்தேன். தீர்மானத்தைச் செயலில் கொண்டு வருவதற்கு ஒரு நிமிஷம்

பிடித்தது. ஏனென்றால் கால்கள் தாமாகவே பிரதட்சிணமாக நடக்கப் பழக்கப்பட்டவை. ஹிம்சை என்பது மனித சுபாவம்-அஹிம்சை என்பது கற்றுக் கொள்ள வேண்டியது. அதுபோலத்தான் இதுவும்.

நான் திரும்பியவுடனே எதிர்ப்பட்டது ஒரு வார்ப்பு. அதுவரை நான் கவனிக்காத ஒரு குறுகிய பாதை போலத் தோன்றியது அது. அப்படி அங்கே அது இருப்பது சாத்தியம் அல்ல என்றுதான் சொல்லவேண்டும். அந்தப் பாதையோடு போனால் குளத்தில்தான் விழவேண்டும். ஆனால் பாதையில் குளம் குறுக்கிடவில்லை. குளத்துக்கு அடியில் போகிறதா பாதை? மேலே போகிறதா? மேலே ஓடுகிற மயிலாப்பூர் கோயில் வந்துவிட்ட எதிர்காலமா இது-அல்லது அந்தப் பாதைகாட்டியது பழங்காலமா?

எதிர்ப்பட்ட மனிதர்கள் பழங்காலத்தவர்கள் போலத்தான் இருந்தார்கள். சட்டை போட்டவர்கள் ஒருவரையுமே காணோம் சைக்கிள் ரிக்ஷா வண்டிகளையும் காணவில்லை தூரத்தில் பஸ் ஸ்டாண்டு ஹார்ன் இரைச்சல்கூடக் கேட்கவில்லை. ஆனால் பாதையில் ஆயிரக்கணக்கானவர்கள் இல்லாவிட்டாலும் நூற்றுக் கணக்கானவர்கள் ஒரே திசை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார்கள். குழந்தைகளை இன்றுபோலத் தோளில் தூக்கி வைத்துக்கொண்டு போன ஆண்களும், குழந்தைகளை அடித்துத் திருத்தி ஆங்காரமாக கூட வாயேன் என்று அதட்டிக்கொண்டு பெண்களும் நிரம்பியிருக் கிறார்கள்.

எங்கே போய்க் கொண்டிருக்கிறார்கள் இவர்கள் என்று பார்க்க எனக்கு ஆவலாக இருந்தது. காரியத்தில் கவனமாக இருந்தவர்கள், நான் ஏதாவது கேள்விகேட்டால் பதில் சொல்லுவார்கள் என்று தோன்றவில்லை! கூடச் சென்று பார்க்கலாம் என்று தோன்றிற்று. எனக்கும் அவசரமாக ஒரு வேலையும் செய்யவேண்டியதில்லை. காலம் என்னைக் கட்டுப்படுத்தியதேயில்லை. ஆனால் பாதை நான் எதிர்பார்த்ததை விடக் கும்பலாகவும் நீளமாகவும்தான் இருந்தது. எனக்குப் பழக்கப்பட்ட landmarks எதுவும் கண்ணில் படவில்லை. ஏதோ புதுப் பிரதேசத்துக்கு வந்துவிட்ட மாதிரி இருந்தது.

நேரே மேலக் கோபுர வாசல் தெரிந்தது. ஒரே நெரிசல், கூட்டம், சலனம், எனினும் மேலக் கோபுர வாசலில் என்ன நடந்து கொண்டிருந்தது என்பது தெரிந்தது. ஏதோ நாடக மேடையில் நடித்துக் காட்டப்படும் ஒரு காட்சிபோல-

"அவர்தான் திருவாதவூரார் மாணிக்கவாசகர். இதற்காகவே வந்திருக்கிறார்" என்று கூட்டத்தில் வாய்க்கு வாய் சொன்னது என் காதில் விழவே யாரைச் சொல்லுகிறார்கள் என்று கவனித்தேன். ஆமாம் அவர்தான் - சிவப்பழமாக முண்டனம் செய்த தலையில் தங்கங் கட்டிய ருத்திராக்ஷம். கழுத்தில் அதைவிட அதிகத் தங்கம் கட்டிய ஒற்றை ருத்திராக்ஷம் மார்பில் புரள நின்றிருந்தார். அவர்தான் மாணிக்கவாசகராக இருக்கவேண்டும். உண்மையில் அவர் சுந்தரர்தான். மாணிக்க வாசகர் அல்ல.

அவருக்கு அப்பால் கவனம் கண்ணை இழுத்தது. ஒரு சிவிகையில் ஒரு சிறு குடத்தை வைத்து அதைச் சுமந்து கொண்டு வந்து நாலு பேர் சிவிகையை மாணிக்க வாசகர் காலடியில் வைத்தார்கள். ஒரு வெள்ளிப்பூண் போட்ட தடி ஊன்றிய சேவகன் பயபக்தியுடன் மஞ்சள் பட்டுத்துண்டால் மூடிய வாயுடன் இருந்த- தங்கமா அது? பித்தளையா? - குடத்தை சிவிகையில் இருந்து எடுத்து வைத்தான். ஒருவரும் எதுவும் பேசவில்லை. எல்லோருக் குமே தெரிந்த ஏதே ஒரு மௌன நாடகத்தை நடத்திக் காட்ட அவர்கள் அங்கே கூடியிருப்பது போலத் தோன்றிற்று. ஆனால் ஒவ்வொருவரும் அவரவருக்கென்று எப்படியோ விதிக்கப்பட்ட இடத்தில் நின்றிருந்தனர். கூட்டம் கூட ஏதோ கட்டுண்டது போலத்தான் ஒரு கிழிக்காத கோட்டைத் தாண்டாதபடி நின்றது.

குடத்தை மூடியிருந்த மஞ்சள் பட்டுத் துண்டைக் குனிந்து திருவாதவூரார் அகற்றினார். கீழே ஒரு சிவப்புப் பட்டுத்துண்டு காணப்பட்டது. பரத நாதட்டியத்தில் முத்திரைகள் Demonstrate பண்ணுவதுபோல ஒரு Ritual சைகையாக அதையும் அகற்றினார் மாணிக்கவாசகர். உள்ளிருந்து லேசாக ஏதோ பனிப்படலம் மேலெழுந்து வருவதுபோல இருந்தது. ஒரு நிமிடம் வாய் ஏதோ முணுமுணுக்க நின்றிருந்தார் மாணிக்க வாசக சுந்தரர். பின்னர் கையைக் குடத்துக்குள் விட்டு ஒவ்வொரு வெளிறிய எலும்பாக எடுத்துக் குடத்துக்குப் பக்கத்தில் தரையில் பரப்பினார். அவற்றை ஒரு வரிசைப்படுத்தி எங்கே எந்த எலும்பு இருக்கவேண்டும் என்று தெரிந்து செய்தமாதிரித் தோன்றவில்லை. கைக்கு வந்தபடி போட்டார்.

இன்னதுதான் நடக்கப்போகிறது என்கிற நிச்சயத்துடன் காத்திருப்பவர்கள் போலக் கூட்டமும், கோயிலும், கபாலியும் காத்திருந்தனர். இந்த நிச்சயம் என் மனத்தில் ஏதோ ஒரு சலனத்தை

எழுப்பியது. இன்னதுதான் நடக்கப்போகிறது என்று எனக்கும் நிச்சயமாகத் தெரிவதுபோல இருந்தது. பதினெட்டு ஆண்டுகளுக்கு முன் இறந்த பெண் உயிர்த்தெழுவாள்; அவளுக்காகத் தவமிருந்த காதலன் அவளை மணமுடிப்பான்-மாணிக்கவாசகர் தயவில். பெண் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன் பதினெட்டாவது வயதில் இறந்தவள், இப்போது இறந்து கிடந்த ஆண்டுகள் அவள் வயசில் சேராமல் பதினெட்டு வயதாகவே இருப்பாள். பையனுக்கு மட்டும் காத்திருந்த பதினெட்டு ஆண்டுகளும் வயசில் கூடியிருக்கும். புதுமணத் தம்பதிகளைப் பார்ப்பவர்கள் 'இரண்டாந்தாரமா? ஐயோ பாவம்!' என்பார்கள்.

மேலே என்ன நடக்கிறது என்று நின்று பார்க்க எனக்கு ஆசையில்லை. ஆசைப்பட்டு இவ்வளவு தூரம் இந்தக் கும்பலிலே வந்ததே தவறுதான் தோன்றிற்று. திரும்பிப் போக வேண்டும்-எப்படிப் போவது-நான் வந்த பாதை எது? எந்தப் பக்கம் திரும்ப வேண்டும்?

தயக்கம் ஒரு விநாடிதான் நீடித்தது. பழைய-அதாவது இன்று பழக்கமான குளத்தங்கரை பிளாஸ்டிக் செருப்புக் கடைகளும், வலது பக்கம் நகைக் கடையும்-நான் வடக்குமாட வீதியில் மேற்கு நோக்கி கோயிலை அப்பிரதக்ஷிணமாகச் சுற்றிக் கொண்டு.....

இடத்தில் வார்ப்பில்லை எதிர்ப்பட்ட பாதை. காலத்தில் வார்ப்பு அப்பிரதட்சிணமாகச் சுற்றியதால் ஏற்பட்டதோ? கபாலிக்கு இன்னும் செயல் இருக்கத்தான் செய்கிறதோ?

செங்குந்தர் கல்யாண மண்டபத்தில் ஏதோ கல்யாணம். நாதஸ்வரக்காரர் அபஸ்வரமாக ஊதிக்கொண்டிருந்தார். அது அவர் உரிமை. அபஸ்வரத்துக்குப் பல உருவங்கள் உண்டு என்று எண்ணிக் கொண்டே வீடு போய்ச் சேர்ந்தேன். இட்லி சாப்பிட மறந்து போய் விட்டது. இரண்டாவது தடவை கிளம்பிப் போகச் சோம்பல். பொழுது வீணாகிப் போனமாதிரி ஒரு நினைப்பு எழுந்தாலும் அப்படி வீணாகவில்லை என்றும் ஒரு நினைப்புத் தோன்றியது.

●

ஞானரதம்
ஜூன் 1986